செறிவுறுசெம்மையதீயையோம்புவ
நெறியுறுசெலவினதவத்தினீண்டன
உறுசினமுறப்பலவுருவுகொண்டன
குறுமுனியெனக்கடல்குடித்தகூர்ங்கணை. (௬௫)

மோதலங்களைக்கடன்முழங்கத்தீயினால்
பூதலங்காவொடுமெரிந்தபொன்மதில்
வேதனுமிலங்கையுமீளப்போயின
ஆதன்வந்தானெனத்துணுக்கங்கொண்டதால். (௬௬)

அருக்கனிலொளிவிடுமாடகக்கிரி
உருக்கெனவுருகினவுதிரந்தோய்ந்தன
முருக்கெனச்சிவந்தனமுரியவெந்தன
கரிக்குவைநிகர்த்தனபவளக்காடெலாம். (௬௭)

பேருடைக்கிரியெனப்பெருத்தமீன்களும்
ஓரிடத்துயிர்தரித்தொதுங்ககிற்றில
நீரிடைப்புகுஞ்சிலநெருப்புநன்றெனப்
பாரிடைக்குதித்தனபதைக்குமெய்யன. (௬௮)

சுருள்கடற்றிரைகளைத்தொலையவுண்டனல்
பருகிடப்புனலிலபகழிபாரிடம்
மருள்கொளப்படர்வனநாகர்வைப்பையும்
இருள்கெடச்சென்றுளவிரவிபோல்வன. (௬௯)

கரும்புறக்கடல்களோடுலகங்காய்ச்சிய
இரும்புறச்செல்வனவிழிவகீழுற
அரும்புறத்தண்டத்தையுருவியப்புறம்
பெரும்புறக்கடலையுந்தொடர்ந்துபின்செல்வ. (௭0)

திடறிறந்துகுமணித்திரள்கள்சேணிலம்
உடறிறந்துதிரம்வந்துகுவபோன்றன
கடறிறந்தெங்கணும்வற்றவக்கடல்
* குடறிறந்தனவெனக்கிடந்தகோளரா. (௭௧)

ஆழியிற்புனலறமணிகளட்டிய
பேழையிற்பொலிந்தனபரவைபேறுறப்
பூழையிற்பொருகணையுருவப்புக்கன
மூழையிற்பொலிந்தன † முரலும்வெள்வளை. (௭௨)

நின்றநூறாயிரம்பகழிநீட்டலால்
குன்றநூறாயிரங்கோடியாயின

---

* குடறிறந்தனவென-குடல்வெளிப்பட்டாங்கு.
† முரலும்-ஒலிக்கின்ற.

சென்றுதேய்வுறுவரோபுலவர்சிறிதும்
ஒன்றுநூறாயினவுவரிமுத்தெலாம். (௫௩)

சூடுபெற்றையனேதொலைக்குமன்னுயிர்
வீடுபெற்றனவிடையிடைந்தவேணுவின்
காடுபற்றியபெருங்கனலிகைபரந்
தோடியுற்றதுநெருப்புவரிநீரெலாம். (௫௪)

காலவான்கடுங்கணைசுற்றுங்கவ்வலால்
நீலவான்றுகிலினைநீக்கிப்பூநிறக்
கோலவான்கனிநெடுங்கூறைசுற்றினாள்
போலமாநிலமகள்பொலிந்துதோன்றினாள். (௫௫)

கற்றவர்கற்றவருணர்வுகாண்கிலாக்
கொற்றவன்படைக்கலங்குடித்தவேலைவிட்
டெற்றுயிர்படைத்தெழுந்தோடலுற்றதால்
மற்றொருகடல்புகவடவைத்தீயரோ. (௫௬)

வாழியருலகினைவளைத்துவாளுறச்
சூழிரும்பெருஞ்சுடர்ப்பிழம்புதோன்றலால்
ஊழியினுலகெலாமுன்னைவோங்கிய
ஆழியிற்பொலிந்ததவ்வாழியன்னநாள். (௫௭)

ஏனையவெண்ணவேறுலகினீண்டினார்
ஆனவர்செய்தனவறையவேண்டுமோ
மேனியிர்ந்தெழுகனல்வெதுப்பபரிந்துபோய்
வானவர்மலயனுலகின்வைகினார். (௫௮)

* இடுக்கினியியம்புவலென்னையிவ்வழி
முடிக்குவென்வருணனையென்னமுன்னெழு
தடுக்கரும்வெகுளியான்சதுமுகன்படை
தொடுத்தினனமரருந்துணுக்கமெய்தினார். (௫௯)

மழைக்குலங்கதறினவருணன்வாயுலர்ந்
தழைத்தனனுலகமுமடைத்தவாறெலாம்
இழைத்தனநெடுந்திசையாறும்யாரினிப்
பிழைப்பிலரென்பதோர்பெரும்பயத்தினால். (௬௦)

வேறு.

அண்டமூலத்துக்கப்பாலாழியுங்கொதித்ததேழு
தெண்டிரைக்கடலின்செய்கைசெப்பியென்றேவன்சென்னி

* இடுக்கு - வருத்தம்.

பண்டைநாளிருந்தகங்கைநங்கையும்பதைத்தாள்பார்ப்பான்
குண்டிகையிருந்தநீருங் * குளுகுளுகொதித்ததன்றே. (சுக)

இரக்கம்வந்தெதிர்ந்தகாலத்துலகெலாமீன்றுமீளக்
கரக்குநாயகனைத்தானுமுணர்ந்திலன்சிற்றங்கண்டும்
வரக்கருதாதுதாழ்த்தவருணனின்மாறுகொண்டார்
அரக்கரேயல்லரென்றுவறிஞருமலக்கணுற்றார். (சுஉ.)

உற்றொருதனியேதானேதன்கணேயுலகமெல்லாம்
பெற்றவன்முனியப்புக்கானவெினிப்பிழைப்பதெங்ஙன்
குற்றமொன்றிலாதோர்மேலுங்கோள்வரக்குறுகுமென்று
மற்றையபூதமெல்லாம்வருணனைவைதமாதோ. (சுந)

இராமனெதிரே வருணனெய்துதல்.

எழுசுடர்ப்படலையோடிரும்புகைநிரம்பியெங்கும்
வழிதெரிவறிவிலாதநோக்கினன்வருணனென்பான்
அழுதழிகண்ணனன்பாலுருகியநெஞ்சனஞ்சித்
தொழுதெழுகையனெய்திற்றோன்றினன்வழுத்துஞ்சொல்லான். (சுச)

நீயெனைநினைந்ததன்மைநெடுங்கடன்முடிவினின்றேன்
ஆயினேனறிந்திலேனென்றண்ணலுக்கயிர்ப்புநீங்கக்
காயெரிப்படலைசூழ்ந்தகருங்கடற்றரங்கத்தூடே
தீயிடைநடப்பான்போலச்செறிபுனற்கிறைவன்சென்றான். (சுரு)

வந்தனனென்பமன்னோமறிகடற்கிறைவன்வாயில்
சிந்தியமொழியன்றீந்தசென்னியன்றிகைத்தநெஞ்சன்
வெந்தழிந்துருகுமெய்யன்விழுப்புகைப்படலம்விம்ம
அந்தரினலமந்தஞ்சித்துயருழந்தலக்கணுற்றான். (சுசா)

நவையறுமுலகிற்கெல்லாநாயகநீயேசீறின்
கவையறின்சரணமல்லாற்பிறிதொன்றுகண்டதுண்டோ?
இவையுனக்கரியவோதானெனக்கெனவலிவேறுண்டோ?
அவையமின்னவயமென்றுவடித்தடந்தாற்றுகின்றான். (சுஎ)

இராமனை வருணனை துதித்தல்.

ஆழிநீயனலுநீயேயல்லவையெல்லாநீயே
ஊழிநீயுலகுநீயேயவற்றுறையுயிருநீயே
வாழியாயடியேனின்னைமறப்பனோவயங்குசெந்தீச்
சூழுறவுலந்துபோனேன்காத்தருள்சுருதிமூர்த்தி. (சுஅ)

காட்டுவாயுலகங்காட்டிக்காத்தவைகடையிற்செந்தீ
ஊட்டுவாயுண்பாய்நீயேயுனக்குமொண்ணுததுண்டோ?

---

* கொளகொள என்றும் பாடம்.

நீட்டுவான்பகழியொன்றாலுலகங்களவையுந்தீய
வீட்டுவானினையிளையேற்கித்தனைவேண்டுமோதான். (௬௯)

சண்டவான்கிரணவாளாற்றயங்கிருட்காடுசாய்க்கும்
மண்டிலத்துறையுஞ்சோதிவள்ளலேமறையின்வாழ்வே
பண்டைநான்முகனேயாதிச்சராசரத்துள்ளபள்ளப்
புண்டரீகத்துவைகும்புராதனா போற்றிபோற்றி. (௭௰)

கள்ளமாயுலகங்கொள்ளுங்கருணையான்மறையிற்கூறும்
எள்ளலாகாதமூலத்தியாதுக்குமுதலாயுள்ள
வள்ளலேகாத்தியென்றமாகரிவருத்தந்தீரப்
புள்ளின்மேல்வந்துதோன்றும்புராதனா போற்றிபோற்றி. (௭௧)

அன்னைநீயத்தனீயேயல்லவையெல்லாநீயே
பின்னுநீமுன்னுநீயேபேறுநீயிகழ்வுநீயே
என்னைநீயிகழ்ந்ததென்றதெங்ஙனமீசனைய
உன்னைநீயுணராய்நாயேனெங்ஙனமுணர்வேனுன்னை. (௭௨)

பாயிருள்சீக்குந்தெய்வப்பரிதியைப்பழிக்குமாலை
மாயிருங்கரத்தான்மண்மேலடியுறையாகவைத்துத்
தீயனசிறியோர்செய்தாற்பொறுப்பதுபெரியோர்மேற்றோ
ஆயிரநாமத்தையாசரணமென்றடியில்வீழ்ந்தான். (௭௩)

இராமன் கோபமாறுதல்.

பருப்பதம்வேவதென்னப்படரொளிபடராநின்ற
உருப்பெறக்காட்டிநின்றியானுனக்கபயமென்ன
அருப்பறப்பிறந்தகோபமாறினனாறுமாற்றல்
நெருப்புறப்பொங்கும் * வெம்பானீருற்றதன்னதானான். (௭௪)

ஆறினுமஞ்சலுன்பாலளித்தனமபயமன்பால்
ஈறிலாவணக்கஞ்செய்தியாமிரந்திடவெய்தாதே
சீறுமாகண்டுவந்ததிறத்தினைத்தெரிவதாகக்
கூறநீயறியவென்றான்வருணனுந்தொழுதுகூறும். (௭௫)

பார்த்தனிற்பொறையின்மிக்கபத்தினிக்குற்றபண்பு
வார்த்தையினறிந்ததல்லாற்றேவர்பால்வந்திலேனேல்
தீர்த்தநின்றுணையேழுஞ்செறிதிரைக்கடலின்பரிசின்
போர்த்தொழில்விலக்கப்போனேனறிந்திலேன்புகுந்ததென்றாம். (௭௬)

என்றலுமிரங்கியையனித்திறமிதற்கவிந்தப்
பொன்றலில்பகழிக்கப்பாலிலக்கமென்புகறியென்ன

* வெம்பால்-இனிமையானபால்.

நன்றெனவருணன்யானுமுலகமுநலிவுதீர்ந்தாம்
குன்றெனவுயர்ந்ததோளாய்கூறுவலென்றுகூறும். (எஎ)

இராமன் கணைக்குவருணன் இலக்குரைத்தல்.

மன்னவமருகாந்தாரமென்பதோர்தீவின்வாழ்வார்
அன்னவர்சதகோடிக்குமேலுளாரவுணராயோர்
இன்னவேயுலகமெல்லாந்தீந்தனவெனக்குந்தீயார்
பின்னுமிழ்கணையைவெய்யோர்மேற்செலவிடுதியென்றான். (எஅ)

கேடிலாறெரிந்துளோர்க்குமுணர்விற்குமிரமின்றோன்
கோடிநூறாயதீயவவுணரைக்குலங்களோடும்
ஓடிநூறென்றுவிட்டானொரிமையொடுங்காமுன்னம்
பாடிநூறாகநூறிமீண்டதப்பகழித்தெய்வம். (எகூ)

ஆய்வினையுடையராகியநம்பிழையாதார்க்கெல்லாம்
ஏய்வனநலனேயன்றியிறுதிவந்தடைவதுண்டோ?
மாய்வினையியற்றிமுற்றும்வருணன்மேல்வந்தசீற்றம்
தீய்வினையுடையார்மாட்டேதீங்கினைச்செய்ததன்றே. (அ0)

பாபமேயியற்றினரைப்பன்னெடுங்காதமோடித்
* தூபமேபெருகும்வண்ணமெரியெழச்சுட்டதன்றே
தீபமேயனையஞானத்திருமறைமுனிவன்செப்பும்
சாபமேயொத்ததம்புதருமமேவலியதம்மா. (அக)

மொழியுனக்கபயமென்றாயாதலான்முனிவுதீர்ந்தேன்
வழியெனக்காகுமென்றுபாதகர்பரவையென்னும்
குழியினைக்கருதிச்செய்த † குமண்டையைக்குறித்துநீங்க
வழியினைத்தருதியென்றான்வருணனைநோக்கிவள்ளல். (அஉ)

ஆழமுமகலந்தானுமளப்பரிதெனக்குமைய
ஏழுவையடுக்கினின்றவுலகுக்குமெல்லையில்லை
பாழியாய்வற்றிநீங்கில்வரம்பிலகாலமெல்லாம்
தாமுநின்சேனையுள்ளந்தளர்வுறுந்தவத்தின்மிக்காய். (அங)

கல்லெனவலித்துநிற்பிற்கணக்கிலவுயிர்களெல்லாம்
மல்லையினுலந்துவீயுமிட்டதொன்றொழுகாவண்ணம்
எல்லையில்காலமெல்லாமேந்துவெனெளிதினெந்தாய்
செல்லுதிசேதுவென்றொன்றியற்றியென்சிரத்தின்மேலாய். (அச)

* தூபம்-புகை. † குமண்டையை-குற்றத்தினை.

நன்றிதுபுரிதுமன்றேநளிகடற்பெருமைநம்பால்
இன்றிதுதீருமென்னிலெளிவரும்பூதமெல்லாம்
குன்றுகொண்டடுக்கிச்சேதுகுயிற்றுதியென்றுகூறிச்
சென்றனனிருக்கைநோக்கிவருணனுமருளிற்சென்றான். (அ௫)

௬-வது, வருணனை வழிவேண்டுபடலம் — முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - ௬௧௧.

---

## ஏ-வது, சேதுபந்தனப்படலம்.

அளவறுமறிஞரோடரக்கர்கோமகற்
கிளவலுமினிதுடனிருக்க * வெண்ணினன்
வினைவனசெய்வனமுடிக்கவேண்டுவான்
நளன்வருகென்றனன்கவிக்குநாயகன். (க)

வந்தனன்வானரத்தச்சன்மன்னநின்
சிந்தனையென்னெனச்செறிதிரைக்கடல்
பந்தனைசெய்குதல்பணிநமக்கென
நிந்தனையிலாதவன்செய்யநேர்ந்தனன். (உ)

காரியங்கடலினையடைத்துக்கட்டலே
சூரியன்காதலேசொல்லியென்பல
மேருவுமணுவுமோர்வேறுறுவகை
ஏருறவியற்றுவென்கொணர்தியென்றனன். (௩)

இளவலுமிறைவனுமிலங்கைவேந்தனும்
அளவறுங்குலத்தரசுமல்லவர்
வளைதருங்கருங்கடலடைக்கவும்மெனத்
† தளமலிசேனையைச்சாம்பன்சாற்றினன். (௪)

கருவரைகாதங்கள்கணக்கிலாதன
இருகையிற்றோள்களிற்சென்னியேந்தின
ஒருகடலடைக்கமற்றொழிந்தவேலைகள்
வருவனவாமெனவந்தவானரம். (௫)

---

* எண்ணினன்-ஆலோசனைசெய்தான்.
† தளமலி-கூட்டத்தின்மிகுந்த.

பேர்த்தனமலைசிலபேர்க்கப்பேர்க்கநின்
றீர்த்தனசிலசிலசென்னியேந்தின
தூர்த்தனசிலசிலதூர்க்கத்தூர்க்கநின்
றூர்த்தனசிலசிலவாடிப்பாடின. (சு)

காலிடையொருமலையுருட்டிக்கைகளின்
மேலுடைமலையினைவாங்கிவிண்டொடும்
சூலிடைமழைமுகில்சூழ்ந்துசுற்றிய
வாலிடையொருமலையீர்த்துவந்தவால். (எ)

முடுக்கினன்றருகெனமூன்றுகோடியர்
எடுக்கினுமம்மலையொருகையேந்தியிட்
டடுக்கினன்றன்வலிகாட்டியாழியை
நடுக்கினனளனெனுநவையினீங்கினன். (அ)

மஞ்சினிற்றிகழ்தருமலையைமாக்குரங்
கெஞ்சுறக்கடிதெடுத்தெறியவேநளன்
* விஞ்சையிற்றாங்கினன்சடையன்வெண்ணெயில்
தஞ்சமென்றோர்களைத்தாங்குந்தன்மைபோல். (கூ)

சயக்கவிப்பெரும்படைத்தலைவர்தாள்களால்
முயற்கறைமதிதவழ்முன்றிற்குன்றுகள்
அயக்கலின்முகிற்குலமலறியோடின
இயக்கருமகளிருமிரியல்போயினார். (கo)

வேருடைநெடுங்கிரிதலைவர்வீசின
ஓரிடத்தொன்றின்மேலொன்றுசென்றுக
நீரிடைநிமிர்பொறிபிறக்கநீண்டவி
தாருடைநெருப்பெனவருணனஞ்சினான். (கக)

ஆணிறக்கண்ணனென்றொருவனங்கையால்
காணிறமலைகொணர்ந்தெறியக்கார்க்கடல்
தூணிறமுத்தினந்துவலையோடும்போய்
வானிறைமீனொடுமாறுகொண்டவே. (கஉ)

சிந்துரத்தடவரையெறியச்சேணிடை
முந்துறத்தெறித்தெழுமுத்தந் † தொத்தலால்
அந்தரத்தெழுமுகிலாடையாவகன்
பந்தரொத்ததுநெடும்பரிதிவானமே. (கங)

வேணுவினெடுவரைவீசமீரிசை
சேணுறுதிவலையானனைந்தசெந்துகில்

* விஞ்சை - தான்கற்றசிற்பவித்தை.
† தோற்றலால் - என்றும்பாடம்.

பூணுறுமல்குலிற்பொருந்திப்போதலால்
நாணினர்வானவர்நாட்டுநங்கைமார். (கச)

தேனிவர்தடவரைதிரைக்கருங்கடல்
தாணிமிர்தரவிடைகுவியத்தள்ளுநீர்
மேனிமிர்திவலைமீச்சென்றுமீடலால்
வானவர்நாட்டினுமழைபொழிந்தவால். (கரு)

வேறு.

மய்யுறுமலைகளோடுமறிகடல்வந்துவீழ்ந்த
வெய்யவாய்மகரம்பற்றவெருவினவிளேப்பமேனாள்
பொய்கையினிடங்கர்கவ்வப்புராதனபோற்றியென்று
கய்யெடுத்தழைத்தயானைபோன்றனகளிநல்யானை. (கசு)

அசும்புபாய்தேனும்பூவுமாரமுமகிலுமற்றும்
விசும்பெலாமுலவுந்தெய்வவேரியின்மிடைந்துவிம்மத்
தசும்பெலாம்வாசமூட்டிச்சார்த்தியதண்ணீரென்னப்
பசும்புலானாறும்வேலைபரிமளங்கமழ்ந்ததன்றே. (கஎ)

தேமுதற்கனியுங்காயுந்தேனிறேனுந்தெய்வப்
பூமுதலாயவெல்லாமீன்கொளப்பொலிந்ததன்றே
மாமுதற்றருவோடொக்கும்வானுயர்மானக்குன்றம்
தாமுதலோடுங்கெட்டாலொழிவரோவண்மைதக்கோர். (கஅ)

மண்ணுறச்சேற்றுட்புக்குச்சுரிகின்றமாலைக்குன்றம்
கண்ணிறைபோதுங்காயுங்கனிகளும்பிறவுங்கவ்வி
வெண்ணிறமீன்களெல்லாம்வறியவென்னமேன்மேல்
உண்ணிறைசெல்வநல்காரொளிக்கின்றவுலோபரொத்த. (கக)

கறங்கெனத்திரியும்வேகக்களிக்குலங்களுவவாங்கிப்
பிறங்கிருங்கடலிற்பெய்தபோழ்துத்தும்பெரியபாந்தள்
மறங்கிளர்மானயானைவயிற்றினவாகவாய்சோர்ந்
துறங்கினகேடுற்றாலுமுணர்வரோவுணர்விலாதார். (உ0)

இழையெனத்தகையமின்னிவெயிற்றினமூழ்கமெய்தப்
புழையுடைத்தடக்கையொன்றோடொன்றிடைபொருந்தசுற்றிக்
கழையுடைக்குன்றின்முன்றிலுருமொடுகலந்தகால
மழையெனப்பொருதவேலைமகரமுமடிந்தமாவும். (உக)

பொன்றினசிறியவாயபுண்ணியம்புரிந்தோர்போலக்
குன்றுகள்குரக்குவீரர்குவித்தனர்நெருப்புக்கோப்ப
ஒன்றின்மேலொன்றுவீழ்வுகைத்தெழுந்தும்பர்நாடு
சென்றுமேவிடம்பெறாதுதிரிந்தனசிகரச்சில்லி. (உஉ)

கூருடையெயிற்றுக்கோண்மாச்சுறவினமெறிந்துகொல்லப்
போருடையரியும்வெய்யபுலிகளும்யாளிப்போத்தும்
நீரிடைத்தோற்றவன்றேதந்நிலைநீங்கிற்றென்றால்
ஆரிடைத்தோலார்மேலோரறிவிடைநோக்கினம்மா. (உரு)

ஒள்ளியவுணர்வுகூடவுதவலரெனினுமொன்றே
வள்ளியராயோர்செல்வமன்னுயிர்க்குதவுமன்றே
துள்ளினகுதித்தமானத்தும்பர்தங்குவட்டிற்றூங்கும்
கள்ளினைநிறையமாந்திக்களியெனக்களித்தமீன்கள். (உசு)

மூசெரிபிறக்கமீக்கொண்டிறக்கியமுடுக்கந்தன்னால்
கோசொரிநறவமென்னத்தண்புனலுகுக்குங்குன்றின்
வேசொரிமுத்துக்கம்மாவிருந்துசெய்திருந்தவிண்ட
வாய்சொரியிப்பியோடும்வலம்புரியுமிழ்ந்தமுத்தம். (உ௬

வேறு.

விண்டலந்தொடுமால்வரைவேரொடும்
கொண்டலங்கொளவீரர்குவித்தலால்
திண்டலங்கடலானதுநீர்செல
மண்டலங்கடலாகிமலிந்ததே. (உகூ)

அய்யன்வேண்டினதுவிதுவாமன்றே
வெய்யசீயமும்யாளியும்வேங்கையும்
மொய்கொள்குன்றின்முதலினமொய்த்தலால்
நெய்தல்வேலிகுறிஞ்சிநிகர்த்ததால். (உஎ)

யானுஞற்றனவிங்கிவையென்னவே
நீனுஞற்றனவென்னிதுசெய்யுமே
மானுஞற்றதிரைக்கடல்வாழ்தரு
மீனுஞற்றனவில்லைவிலங்கரோ. (உஅ)

வவ்விலங்குவளர்த்தவர்மாட்டருள்
செவ்விலங்கலில்சிந்தையர்நீர்வரோ
இவ்விலங்கல்விடேபினியென்பபோல்
எவ்விலங்கும்வந்தெய்தினவேலையே. (உகூ)

கனிதருந்நெடுங்காய்தருநாடொறும்
இனிதருந்தவநொய்தினியற்றலால்
பனிதருங்கிரிதம்மனம்பற்றறு
முனிவரும்முனியார்முடிவுன்னுவார். (௩0)

புலையின்வாழ்க்கையரக்கர்பொருப்புளார்
தலையின்மேல்வைத்தகையினர்சாற்றுவார்

மலையிலேமற்றுமாறினிவாழ்வதோர்
நிலையிலேமென்றிலங்கைநெருக்குவார். (௩௧)

முழுக்கநீரிற்புகாமுழுகிச்செலாக்
குழுக்களோடணைகோளரியாளிகள்
இழுக்கில்பேரணையின்னிருபக்கமும்
ஒழுக்கின்மாலைவகுத்தனவொத்தவால். (௩௨)

பளிக்குமால்வரைமுந்துபடுத்தன
ஒளிக்குமாழிகிடந்தனவோர்கிலர்
வெளிக்குமால்வரைவேண்டுமெனக்கொணர்ந்
தளிக்கும்வானரவீரரநேகரால். (௩௩)

பாரிணுண்முதுகுந்நெடும்பாழ்பட
மூரிவானரம்வாங்கியமொய்ம்மலை
வேரிணுமெனவெம்முழைமின்னுழை
சோருநாகநிலனுறத்தூங்குமால். (௩௪)

அருணச்செம்மணிக்குன்றயலேசில
இருணற்குன்றமடுக்கினவேய்ந்தன
கருணைக்கொண்டல்வறியன்கழுத்தென
வருணற்கீந்தவருணசரத்தையே. (௩௫)

எய்ந்ததம்முடம்பிட்டவுயிர்க்கிடம்
ஆய்ந்துகொள்ளுமறிஞரிணுழ்கடல்
பாய்ந்தபண்டுறையும்மலைப்பாந்தள்கள்
போந்தமாமலையின்முழைபுக்கவே. (௩௬)

சேதுவின்பெருமைக்கிணைசெப்பவோர்
ஏதுவேண்டுமென்றெண்ணுவதென்கொலோ
* தூதனிட்டமலையின்றுவலையால்
மீதுவிட்டுலகுற்றனமின்கஞரும். (௩௭)

நீலனிட்டநெடுவரைநின்றில
மூலமுட்டலின்மொய்புனல்கைம்மிகக்
† கூலமிட்டியவார்கலிகோத்ததால்
ஓலமிட்டெழுந்தோடியுலகெலாம். (௩௮)

மயிந்தனிட்டநெடுவரைவானுற
உயர்ந்துமுட்டிவிழவெழுந்தோதநீர்
‡ தியந்தமுட்டத்திசைநிலையானையும்
பெயர்ந்துவிட்டவையாவும்பிளிறுவ. (௩௯)

* தூதன் - அனுமான்.
† கூலம் - கரை. ‡ தியந்தம் - திகந்தம்.

இலக்குவன்சரமாயினுமேன்றெதிர்
விலக்கினும்விலங்காதவிலங்கலால்
அலக்கணெய்தியமிழ்தெழ * வாழியைக்
கலக்கினன்மகன்மீளக்கலக்கினான். (௬0)

மருத்தின்மைந்தன்மணிநெடுந்தோளனப்
பெருத்தகுன்றங்கரடிப்பெரும்படை
விருத்தனிட்டவிசையினின்வீசிய
திருத்தம்வானவர்சென்னியிற்சென்றதால். (௬க)

குமுதனிட்டகுலவரைகூத்தரின்
திமிதமிட்டுத்திரையுந்திரைக்கடல்
துமிதமூர்புகவானவர்துள்ளினார்
அமுதமின்னுமெழுமெனுமாசையால். (௬உ)

கனசினத்துருமிற்கடுங்கார்வரை
பனசனிட்டனயாவும்பரிக்கிலன்
மனசினத்தவநந்தனவ்வாழ்விகந்
தனசினத்தொழின்மேற்கொள்வதாயினான். (௬ங)

எண்ணிலெண்ணினமிட்டகிரிக்குலம்
உண்ணவுண்ணச்சென்றொன்றிறொடொன்றுறச்
சுண்ணநுண்பொடியாகித்தொலைந்தன
புண்ணியம்பொருந்தாதமுயற்சிபோல். (௬௪)

ஆரவாயிரயோசனையாழமுந்
தீரநீண்டுபரந்ததிமிங்கிலம்
பாரமால்வரையேறப்பதைத்துடல்
பேரவேகுன்றும்வேலையும்பேர்ந்தவால். (௬௫)

குலைகொளக்குறிநோக்கியகொள்கையான்
சிலைகளொக்கமுறித்துச்செறித்தநேர்
மலைகளொக்கவடுக்கிமணற்படத்
தலைகளொக்கத்தடவுந்தடக்கையால். (௬௬)

தழுவியாயிரகோடியதாங்கிய
குழுவின்வானரந்தந்தகிரிக்குலம்
எழுவினீள்கரத்தெற்றிடவிற்றிடை
வழுவிவீழ்வனகால்களின்வாங்குவான். (௬எ)

மலைசுமந்துவருவனவானரம்
நிலையினின்றனசெல்லநிலம்பெரு

---

ஆழியை — பாற்கடலை.

அலைநெடுங்கடலன்றியுமாண்டுத்தந்
தலையின்மேலொருசேதுதருவ * போன்ம். (சஅ)

பருத்தமால்வரையேந்தியபல்படை
நிரைத்தலிற்சிலசெல்லநிலம்பெருக்
கரத்தினேந்தியகார்வரைகண்ணகன்
சிரத்தின்மேற்கொண்டுநீந்தினசென்றவால். (சகூ)

ஆய்ந்துநீளமரிந்துசுமந்தன
ஓய்ந்தகாலபசியினுலந்தன
ஏந்துமால்வரைவைத்தவற்றீண்டுதேன்
மாந்திமாந்திமறந்துதுயின்றவால். (ருo)

போதல்செய்குநரும்புகுவார்களும்
மாதிரந்தொறும்வானரவீரர்கள்
சேதுவெத்துணைசென்றதென்பார்சிலர்
பாதிசென்றதெனப்பகர்வார்சிலர். (ருக)

குறைவில்குங்குமமுங்குளைத்தேன்களும்
நிறைமலர்க்குலமுந்நிறைந்தெங்கணும்
துறைதொறுங்கிரிதூங்கினதோய்தலால்
† நறைநெடுங்கடலொத்ததுநாமநீர். (ரு௨)

நெடும்பன்மால்வரைசார்த்துநெருக்கவும்
‡ துடும்பல்வேலைதுளங்கியதில்லையால்
இடும்பையெத்துணையும்படுத்தெய்தினும்
குடும்பந்தாங்குங்குடிப்பிறந்தாரினே. (ருந)

கொழுந்துடைப்பவளக்கொடியின்குலம்
அழுந்தவுய்த்தவடுக்கறகர்ந்தயல்
விழுந்தபன்மணியின்னொளிர்மிசை
எழுந்தவெங்கணுமிந்திரவில்லினே. (ருச)

பழுமரம்பறிக்கப்பறவைக்குலம்
தழுவிநின்றொருவன்றனிதாங்குவான்
விழுதலும்புகல்வேற்றிடமின்மையால்
அழுதரற்றுங்கிளையெனவானவால். (ருரு)

¹ தாவலோவலமென்றதுதாங்கிய
மாவெலாங்கடல்வீழ்தலும்வண்டெலாம்

* போன்ம் — போலும்.
† நறைநெடுங்கடல்-தேனினையுடையநெடிசமுத்திரம்.
‡ துடும்பல் - துளும்பல்.
¹ [illegible]

[1]காவலாளர்விழிக்களைகண்ணிலா
[2]ஏவலாளரினெங்குந்திரிந்தவால்.

தொக்கடங்கலவோடுந்துவலைகள்
மிக்கடங்கலும்போவனமீன்குலம்
அக்கருங்கடறூரவயற்கடற்
புக்கடங்கிடப்போவனபோன்றவே. (௫எ)

மூசுவண்டினமும்மதயானையின்
ஆசைகொண்டனபோற்றொடர்ந்தாடின
ஓசையொண்கடல்குன்றொடவைபுக
வேசைமங்கையராமெனமீண்டவே. (௫அ)

நிலமரங்கியவேரொடுநேர்பறித்
தலமருந்துயரெய்தியவாயினும்
வலமரங்களைவிட்டிலமாசிலாக்
குலமடந்தையரென்னக்கொடிகளே. (௫கூ)

* துப்புறக்கடறாயதுவலையால்
அப்புறக்கடலுஞ்சுவையற்றன
எப்புறத்துருமேறுங்குளிர்ந்தன
உப்புறைத்தனமேகமுகுத்தநீர். (௬௦)

முதிர்நெடுங்கிரிவீழமுழங்குநீர்
எதிரெழுந்துநிரந்தரமெய்தலால்
மதியவன்கதிரிற்குளிர்வாய்ந்தன
கதிரவன்கனல்வெங்கதிர்க்கற்றையே. (௬க)

நன்கொடித்துநறுங்கிரிசிந்திய
† பொன்கொடித்துவலைப்பொதிந்தோடுவ
வன்கொடிப்பவளங்கள்வயங்கலால்
மின்பொடித்ததுபோன்றனவிண்ணெலாம். (௬௨)

ஓடுமோட்டருமொன்றின்முன்றொன்றுபோய்க்
காடுநாடுமரங்களுங்கற்களும்
நாடுநாட்டுநெளிர்கடலூட்டிலோர்
‡ பூடுமாட்டலிலாயபொருப்பரோ. (௬௩)

வரைப்பரப்பும்வனப்பரப்புமுவர்த்
தரைப்பரப்புவதென்னத்தனித்தனி
உரைப்பரப்புமுறுகிரியொண்கவிக்
கரைப்பரப்புக்கடற்பரப்பானதால். (௬௪)

---

* துப்புறக்கடல்-பவளக்கொடிகளையுடையவக்கடல்.
† பொன்கொடி-பொன்மயமானகொடி.
‡ பூடு-சிறுசெடி.

உற்றதாலணையோங்கலிலங்கையை
முற்றமூன்றுபகலிடைமுற்றவும்
பெற்றவார்ப்புவிசும்புபிளந்ததால்
மற்றிவானம்பிறிதொருவான்கொலோ. (கூரு)

நாடுகின்றதென்வேறொன்றுநாயகன்
தோடுசேர்குழலாடுயர்நீக்குவான்
ஓடுமென்முதுகிட்டெனவோங்கிய
சேடனென்னப்பொலிந்ததுசேதுவே. (கூசு)

மெய்யினீட்டத்திலங்கையர்மேன்மகள்
பொய்யினீட்டியதீமைபொறுக்கலா
தய்யனீட்டியசேனைகண்டன்பினால்
கையைநீட்டியதன்மையுங்காட்டுமால். (கூஎ)

கானயாறுபரந்தகருங்கடல்
ஞானநாயகன்சேனைநடத்தலால்
ஏனையாறினியானலதாரென
வானயாறிம்பர்வந்ததுமானுமால். (கூஅ)

* கற்கிடந்தொளிர்காசினங்காந்தலால்
மற்கடங்கள்வகுத்தவயங்கணை
எற்கடந்தவிருளிடையிந்திரன்
விற்கிடந்தனவென்னவிளங்குமால். (கூகூ)

ஆனபேரணையன்பினமைத்தனர்
ஞானவாழ்க்கைக்கவிக்குலநாதனும்
மானவேலையிலங்கையர்மன்னனும்
ஏனையோருமிராமனையெய்தினர். (எ0)

எய்தயோசனையீண்டொருநூறினை
அய்யிரண்டினகலமமைத்திடச்
செய்ததாலணையென்றதுசெப்பினர்
வய்யநாதன்சரணம்வணங்கியே. (எக)

எ-வது, சேதுபந்தனப்படலம் - முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூகக.

---

* கற்கிடந்து-மணிகள்தங்கி.

# அ-வது, ஒற்றுக்கேள்விப்படலம்.



இராமன் நளனைக் கட்டித்தழுவியது கூறல்.

ஆண்டகையுமன்பிைெடுகாதலமிழ்தூற
நீண்டகையினனளனைநெஞ்சினெடுபுல்லி
ஈண்டவெழுகென்றனனிமைழத்தபடியெல்லாம்
காண்டலதன்மேனெடியகாதன்முதிர்கின்றான். (௧)

பண்டையுறையுட்கெதிர்படைக்கடலின்வைகும்
கொண்டலெனவந்தவணையைக்குறுகிநின்றான்
அண்டமுதல்வன்றெருதனுவியனையாளைக்
கண்டனனெனப்பெரியகாதன்முதிர்கின்றான். (உ)

இராமன் நளனைப்புகழ்தல்.

நின்றுநெடிதுன்னியநிரைக்கடனிரம்பக்
குன்றுகொடடைத்தணைகுயிற்றியதொர்கொள்கை
அன்றுலகுதந்தமுதலந்தணனமைத்தான்
என்றபொழுதின்கணுமிதென்றி * யலுமென்றான். (௩)

ஊழிமுதனயகன்வியப்பிைெடுவந்தான்
ஆழமுரைசெய்யுமளவேயினியதொன்றே
ஆழியிலிலங்கைபெரி † தத்திசையதாமேல்
ஏழுகடலுங்கடிதடைப்பனிவனென்றான். (௪)

என்றுநளனைக்கருணையிற்றழுவியன்பால்
அன்றுவருணன்னுதவுமாரமுமளித்துத்
துன்றுகதிர்பொற்கலனுமற்றுளதொகுந்தே
வென்றியினியென்றுபடையோடுடன்விரைந்தான். (௫)

இராமன் சேதுவிற்செல்லுதல்.

நெற்றியிலரக்கர்பதிசெல்லநிறைநன்றால்
கற்றுணருமாருதிகடைக்குழைவரத்தன்
வெற்றிபுணர்தம்பியொருபின்புசெலவீரப்
பொற்றிரள்புயக்கருநிறக்களிறுபோனான். (௬)

இருங்கவிகொள்சேனைமணியாரமிடறத்தன்
மருங்குவளர்தண்டலைவயங்குதிரைமான
ஒருங்குநனிபோயினவுயர்ந்தகரையூடே
கருங்கடல்புகப்பெருகுகாவிரிகடுப்ப. (௭)

* இயலும் — முற்றும்.

† அத்திசையதாமேல்-அந்ததூரதிசையிலிருப்பதானல்.

ஓதியகுறிஞ்சிமுதலாயநிலமுள்ள
கோதிலவருந்துவனகொள்ளோயின்முகந்துற்
றியாதுமொழியாவகைசுமந்துகடலெய்தப்
போதலுறுமன்னபடைபொன்னியெனலான. (௮)

ஆயதுநெருங்கவடியிட்டடியிடாமல்
தேயுநெறிமாடுதிரையூடுவிசைசெல்லப்
போயசிலபொங்குதொறுபொங்குதொறு * பூசற்
பாய்புரவியிற்படர்வபோலினிதுபாய்வ. (௯)

மெய்யிடைநெருங்க † விசையுற்றவயல்வீழும்
‡ பொய்யிடமிலாதபுனலிற்புகலிலாத
உய்விடமளிக்குமருளாளர்முறையுய்த்தார்
கய்யினிடைசென்றுகரைகண்டகரையில்லை. (௧௦)

$ இழைத்தனையவெங்கதிரின்வெஞ்சுடரிராமன்
மழைத்தமுகிலன்னமணிமேனிவருடாமல்
தழைத்தநிழலுற்றகுளிர்சந்தனமுயர்ந்த
அழைத்தவையெடுத்தருகுசென்றனர்மேகர். (௧௧)

ஓமநெறிவாணர்மறைவாய்மையொருதாமே
ஆமரசர்மைந்தர்திருமேனியலசாமே
பூமரணிறுத்தவைபொருந்தவைபொருந்தித்
சாமரையின்வீசினர்படைத்தலைவர்தாமே. (௧௨)

இராமனக்கரையடைதல்.

மருங்கடவளர்ந்தமுலைமங்கைமனமுன்றொ
வருங்கடகமங்கையினில்வள்ளலிளவின்றுன்
ஒருங்கடலுயர்ந்தபடர்தானையொடுமேறத்
திருங்கடல்கடந்துகரையேறினனிராமன். (௧௩)

பெருந்தவமுயன்றமரர்பேணியதவத்தால்
மருந்தனையதம்பியொடுவள்ளலுமனத்தேமாயிர்
அருந்ததியும்வந்தனைசெயுந்தொகுசலியாற்றி
இருந்தநகரின்புறநெருங்குன்றிடையிருந்தான். (௧௪)

வேறு.

நீலனைநெடிதுநோக்கிநேமியோன்நினையங்கம்
பால்வருசேனைக்கெல்லாநிலைபெற்றயோர்பாறுமென்றுங்
கால்வரைவணங்கிப்போனான்கவிநெருங்கவன்கட்டு
நூலுரைவழிசெய்தானுக்கணிலைசொய்திற்சொன்றென். (௧௫)

---

* பூசல் - போர்.
† வடியிட்டடியிடாமல் எனப் பாடமுமுண்டு.
‡ பொய்யிடம் - வெற்றிடம்.
$ இழைத்தனைய - பதித்துவைத்தாற்போன்ற.

்பொன்னினுமணியினுனுநான்முகன்புனைந்தபொற்பின்
ன்னலமாகவாங்கிநான்முகச்சதுரநாட்டி
நின்னரென்றுதவண்ணமிறைவர்க்கும்பிறர்க்குமெல்லாம்
ன்னகர்நொய்திற்செய்தான்றுதையுநானுட்கொண்டான். (கசு)

பில்லினார்க்கிருக்கைசெய்யும்விருப்பினுற்பொருப்பின்வீங்கும்
கல்லினுற்கல்லையொக்கக்கடாயினன்கழைகளான
* நெல்லினுலலக்குங்காலுகிரப்பினன்றருப்பையென்னும்
புல்லினற்றெடுத்துவாசப்பூவினல்வேய்ந்துபோனன். (கஎ)

பாயினுமனத்தினுனும்வாழ்த்திமன்னுயிர்கட்கெல்லாம்
தாயினுமன்பினுனைத்தாளுறவணங்கித்தத்தம்
ரயினவிருக்கைநோக்கியெண்டிசைமருங்கும்யாரும்
போயினர்பன்னசாலையிராமனுநொய்திற்புக்கான். (கஅ)

அப்புநீராயவீரர்பருவரைகடலிற்பாய்ச்சத்
துப்புநீராயதூயசுடர்களுங்கறுக்கவந்திட்
ப்புநீரகத்துட்டோய்ந்தவொளிநிறம்விளங்கவப்பால்
அப்புநீராவொன்போலருக்கனுமத்தஞ்சேர்ந்தான். (கக)

ாலுறுகுடகவானின்வயங்கியவந்துதோன்றும்
ாலுறுபசுவெண்டிங்கள்பங்கயநயனத்தண்ணல்
† மேலுறுபகழிவாங்கிவெகுண்டனன்விரைவின்வந்த
ாலுறவளைத்தகாமன்வில்லெனக்காட்டிற்றன்றே. (உ0)

நாற்றிதழ்க்கமலந்தந்தநுண்ணறுஞ்சுண்ணமுண்ணத்
ீற்றிமென்பனிநீர்தோய்ந்தசீகரத்தென்றலென்னும்
ாற்றினுமாலையானகனலினுங்காமவாளிக்
ூற்றினும்வெம்மைகாட்டிக்கொதித்ததக்குளிர்வெண்டிங்கள். (உக)

‡ செயிர்ப்பினுயழுகுசெய்யுந்திருமுகத்தணங்கைத்தீர்ந்து
துயிற்சுவைமறந்தான்றேரிற்றாய்விலாத்தவழுந்தோற்றம்
மயிற்குலம்பிரிந்ததென்னமரகதமலைமேன்மென்மை
டயிர்ப்புடைவெள்ளைப்பிள்ளைவாளாராவூர்வபோன்ற. (உஉ)

ன்னெனநகரமாடேவருதலால்வயிரச்செங்கைப்
பொன்னெடுந்திரடோளையன்மெய்யுறப்புழுங்கினைந்தான்
ன்னெடுங்காதத்தேயுஞ்சுடவல்லபவளச்செவ்வாய்
அந்நெடுங்கருங்கட்டையையனுகினுற்றனிவதுண்டோ. (உ௩)

இற்றதுகாலமாகவிலங்கையர்வேந்தனேவ
ற்றர்வந்தளவுநோக்கிக்குரங்கெனவுழல்கின்றுரைப்

* நெல் - மூங்கில்
† மேல் - நீது.
‡ செயிர்ப்பினும் - கோபங்கொண்டாலும்.

பற்றினனென்பமன்னோபண்டுதான்பலநாட்செய்த
நற்றவப்பயன்றந்துய்ப்பமுந்துறப்போந்த * நம்பி. (உச)

பேர்வுறுகவியின்சேனைப்பெருங்கடல்வெள்ளந்தன்னுள்
ஓர்வுறுமனத்தனாகியொற்றரையுணர்ந்துகொண்டான்
சேர்வுறுபாலின்வேலைசிறுதுளிதெறித்தவேனும்
நீரினைவேறுசெய்யுமன்னத்தினீரனானான். (உரு)

பெருமையுஞ்சிறுமைதானுமுற்றுறுபெற்றியாற்ற
அருமையினகன்றுநீண்டவிஞ்சையுளடங்கித்தாமும்
உருவமுந்தெரியாவண்ணமொளித்தனருறையுமாயர்
† திருவரையொருங்குகாணும்யோகியுமென்னலானான். (உசு)

கூட்டியவிரற்றிண்கையாற்குரங்குகளிரங்கக்குத்தி
மீட்டொருவினைசெய்யாமன்மாணையின்கொடியால்கட்டிப்
பூட்டியகையர்வாயாற்குருதியேபொழிகின்றானைக்
காட்டினன்கள்வரென்றுக்கருணையங்கடலுங்கண்டான். (உஎ)

பாம்பிழைப்பள்ளிவள்ளல்பகைஞனென்றுணரான்பல்லோர்
நோம்பிழைசெய்தகொல்லோகுரங்கெனவிரங்கிநோக்கித்
தாம்பிழைசெய்தாரேனுந்தஞ்சமென்றடைந்தார்தம்மை
நாம்பிழைசெய்யலாமோ [illegible] (உஅ)

அகனுறப்பொலிந்தவள்ளல்கருணை [illegible]
நகனிறைகாணின்வைகுசம் [illegible]
தகவிறைவில்லாவுள்ளத் [illegible]
சுகனிவனவனுஞ்சாரனென்ப [illegible] (உகூ)

கல்விக்கண்மிக்கோன்சொல்ல [illegible]
வல்விற்கைவீரமற்றிவ்வானரர் [illegible]
வெல்விக்கையரிதென்றென் [illegible]
கொல்விக்கவந்தான்மெய்ம் [illegible] (௩0)

‡ கள்ளரேகாண்டியென் [illegible]
தெள்ளியதெரிக்குந்தெய்வ [illegible]
$ துள்ளியினிரதம்போய் [illegible]
வெள்ளியோடிருந்தசெம்பு [illegible] (௩க)

மின்குலாமெயிற்றராகி [illegible]
வன்கணார்தம்மைநோக்கி [illegible]

* நம்பி - விட்டணன்.
† இருவரை - சீவேசுரர்களாகிய இருவரை.
‡ கள்ளரே - அரக்கரே.
$ துள்ளியினிரதம் - துளியானபாதரசம்.

புன்கணோர்புன்மைநீக்கும்புரவலன்போந்ததன்மை
ான்கொலாந்தெரியவெல்லாமியம்புதிரஞ்சலென்றான். (௩௨)

நாய்தெரிந்துலகுகாத்ததவத்தியைத்தன்னைக்கொல்லும்
நோய்தெரிந்துணரான்றேடிக்கொண்டன * னுவலவென்று
வாய்தெரிந்துணராவண்ணங்கழறுவார்வணங்கிமாய
வெய்தெரிந்துரைக்கவந்தேம்வினையினல்வீரவென்றார். (௩௩)

ால்லையிலிலங்கைச்செல்வமிளையவற்கீந்ததன்மை
சொல்லுதிர்மகரவேலைகவிக்குலவீரர்ஆர்த்த
ல்லினிற்கடந்தவாறுங்கழறுதிர் † காலந்தாழ்த்த
வில்லினர்வந்தாரென்றும்விளம்புதிர்விளம்பலாதீர். (௩௪)

கொத்துறுதலையான்வைகுங்குறும்புடையிலங்கைக்குன்றம்
த்துறுதடநீர்வேலைதனியொருசிறையிற்றூதல்
த்துறவுணர்ந்திலாமையுயிரொடுமுறவினோடும்
த்துணையிருந்ததென்னுந்தன்மையுமியம்புவீரால். (௩௫)

ண்டங்கொள்வேகமாகத்தனிவிடையுவணந்தாங்கும்
ண்டங்கொள்பிறையான்மோலித்துளவினோடுந்தொல்லை
ண்டங்களெவையுந்தாக்கிக்காப்பினுமறமிலாதான்
ண்டங்கள்பலவுங்காணக்காண்பதுங்கழறுவீரால். (௩௬)

ட்டுறுமழுவாள்வீரன்றாதையைச்செற்றோன்சுற்றம்
‡ மாட்டியவண்ணமென்னவருக்கமுமற்றுமுற்றும்
வீட்டியென்றாதைக்காகமெய்ப்பலிவிசும்புளோருக்
ட்டுவெனுயிர்கொண்டென்னும்வார்த்தையுமுணர்த்துவீரால். (௩௭)

ாழ்விலாத்தவத்தோர்தையறனியொருசிறையிற்றூகச்
ழ்விலாவஞ்சஞ்சூழ்ந்ததன்னைத்தன்சுற்றத்தோடும்
ாழ்வெலாந்தம்பிகொள்ளவயங்கெரிநரகமென்னும்
ழ்விலாச்சிறையின்வைப்பெனென்பதும்விளம்புவீரால். (௩௮)

நாக்கினிர்தானையெங்குநுழைந்தனிரினிவேறென்றும்
க்குவுதில்லையாயினஞ்சலென்றறைந்துண்டன்றே
ாக்கினீன்மனத்திற்கையின்மற்றினிவலியாவண்ணம்
பாக்குமின்விரைவினென்றானுய்ந்தனமென்றுபோனார். (௩௯)

வேறு.

இராவணனது மந்திராலோசனை.

அரவமாக்கடலஞ்சியவச்சமும்
உரவுநல்லணையோட்டியவூற்றமும்

---

* நுவலவென்று-ஒற்றிவாருமென்று கூறாநிற்ப.
† காலந்தாழ்த்த-வாழ்நாளைக்குறைக்க.
‡ மாட்டிய-அழித்த.

வரவுநோக்கியிலங்கையர்மன்னவன்
இரவிதெண்ணிடவேயிருந்தானரோ. (ச0)

வார்குலாமுலைமாதருமைந்தரும்
ஆருநீங்கவறிஞரோடேகினான்
சேர்கவென்னினல்லாலன்றுதென்றலும்
சார்கிலாநெடுமந்திரசாலையே. (சக)

உணர்வினெஞ்சினருமருமைப்பொருள்
புணருங்கேள்வியரல்லர்பொறியிலர்
கொணருங்கூனர்குறளர்கொழுஞ்சுடர்
துணருநல்விளக்கேந்தினர்சுற்றினார். (சஉ)

நணியர்வந்துமணிசர்சமக்கினிச்
துணியுங்காரியம்யாதெனச்சொல்லினான்
பணியுந்தானவராதியர்பன்முடி
மணியினான்விளங்கும்மணித்தாளினான். (சங)

காலவெங்கனல்போலுங்கணைகளால்
வேலைவெந்துகடுக்கிவெயிற்புரை
மாலைகொண்டுவணங்கியவாறெலாம்
சூலமன்னவென்னெஞ்சைத்தொளைக்குமால். (சச)

கிழிபடக்கடலீண்டநுமாண்டது
மொழிபடைத்தவலிபொழுண்டதோ
பழிபடைத்தபெரும்பயத் * தன்னவன்
வழிகொடுத்ததென்றுள்ளம்வருத்துமால். (சரு)

படைத்தமால்வரையாவும்பறித்துவோர்
துடைத்தவானரவீரர்தந்தோள்களைப்
புடைத்தவாறும்புணரியைப்போக்கற
அடைத்தவாறுமென்னுள்ளத்தடைத்ததால். (சசா)

காந்துவெஞ்சினவீரர்கணக்கிலார்
தாந்தமாற்றலுக்கேற்றதாத்தர
வேந்தவெற்பையொருவன்விரல்களால்
ஏந்தியிட்டதென்னுள்ளத்திலிட்டதால். (சஎ)

சுட்டவாகண்டுந்தொன்னகர்வேலையைத்
தட்டவாகண்டுந்தாவற்றதெவ்வரைக்
கட்டவாகண்டுங்கண்ணெதிரேவந்து
விட்டவாகண்டுமேலெண்ணம்வேண்டுமோ. (சஅ)

---

* அன்னவன் - அக்கடலிறைவன்.

என்றுதாயைப்பயந்தோனியம்பலும்
தின்றுவாயைவிழிவழித்தீயுக
நன்றுநன்றுநம்மந்திரநன்றெனு
* என்றும்வாழ்தியிளவலோடேகென்முன். (சக)

ஈனமேகொலிதமெனவெண்ணுரு
மோனமாகியிருந்தனன்முற்றினுன்
ஆனகாலையடியினிறைஞ்சிய
சேனைநாதனினையனசெப்பினுன். (ருo)

கண்மையின்னகர்வேலைகடந்தவத்
திண்மையொன்றுமலாற்றிசைகாவலர்
எண்மரும்மிவற்கேவல்செய்கின்றவவ்
வுண்மையொன்றுமுணர்ந்திலேபோலென்முன். (ருக)

கூசிவானரங்குன்றுகொடிக்கடல்
வீசினுரெனும்வீரம்விளம்புவாய்
ஊசிவேரொடுமோங்கலையோங்கிய
ஈசனேடுமெடுத்ததுமில்லையோ. (ருஉ)

அதுகொடென்சிலவாரமர்மேலினி
மதிகெடுந்தகையோர்வந்துநாமுறை
பதிபுகுந்தனர்தம்மைப்படுப்பதோர்
விதிகொடுந்தவினைந்ததுதானெனென்முன். (ருங)

முற்றுமூடியகஞ்சுகன்மூட்டிய
வெற்றனற்பொறிக்கண்ணினன்வேத்திரம்
பற்றுமங்கையினன்படிசாரநின்
ெற்றர்வந்தனரென்னவுணர்த்தினுன். (ருச)

மனைக்கண்வந்தவன்பாதம்வணங்கினுர்
புனைக்கைவன்குரங்கின்படர்சேனையை
நினைக்குந்தோறுமுலமருநெஞ்சினுர்
கனைக்குந்தோறுமுதிரங்கள்கக்குவார். (ருரு)

ஒற்றரை இராவணனுற்றதுரைமினெனல்.

வெள்ளவாரிவிரிவொடவ்வீடணன்
தள்ளவாரிநிலைமையுந்தாபதன்
உள்ளவாறுமுரைமினென்முனுயிர்
கொள்ளவாய்வெருவுங்கொடுங்கூற்றனுன். (ருசு)

* என்றும் — எப்பொழுதும்.

அடியமங்கெடுஞ்சேனையையாசையால்
முடியநோக்கலுற்றேறமுதுவேலையின்
படியைநோக்கியபாரம் * படர்குற்ற
கடியவேகக்கலுழனிற்கண்டிலம். (௫௭)

நுவலயாம்வரவேண்டியநோக்கநோ
கவலைவேலையெனுங்கரைகாண்கிலா
தவலமெய்தியடைத்துழியார்க்கெழும்
† துவலையேவந்துசொல்லியதில்லையோ. (௫௮)

எல்லைநோக்கவுமெய்திலதாமெனும்
சொல்லைநோக்கியமாருதன்றோன்றலும்
கல்லைநோக்கிக்கனைகடனோக்கிடுங்
வில்லைநோக்கவும்வெந்துறவேலையே. (௫௯)

தாருலாமணிமார்பனின்றம்பியே
தேருலாவுகதிருந்திரிந்ததன்
பேருலாவுமளவினும்பெற்றனன்
நீருலாவுமிலங்கைநெடுந்திரு. (௬௦)

சேதுபந்தனஞ்செய்தனவென்றதிப்
போதுவந்தபுதுவலியோவொரு
தூதுவந்தவன்றோன்றலிசொல்லிய
எதுவந்தயிலாதவிருக்கவே. (௬௧)

மருந்துதேவருந்தியமாலைவாய்
‡ இருந்ததானவர்தம்மையியைந்துமுன்
பெருந்திண்மாயற்குணர்த்தியபெற்றியின்
தெரிந்துகாட்டினனும்பினைத்திறென். (௬௨)

பற்றிவானரவீரர்பனைக்கையால்
எற்றியெங்களையேநெடுந்தோளுறச்
சுற்றியீர்த்தலைத்துச்சுடர்போலொளிர்
வெற்றிவீரனிற்காட்டிவிளம்பினென். (௬௩)

சரங்களிங்கிவற்றிற்பண்டுதோறுடை
வரங்கள்சிந்துவெனென்றனன்மற்றெமைக்
குரங்கலாமைதெரிந்துமற்கொற்றவன்
இரங்கவுய்த்தனமீதெங்கணொற்றென்றார். (௬௪)

* பாரம் — முடிவை.
† துவலை — நீர்த்துளி.
‡ இருந்ததானவர் — இராகுவாதியர்.

மற்றும்யாவையும்வாய்மையவானவன்
சொற்றயாவையுஞ்சோர்வின்றிச்சொல்லினூர்
குற்றம்யாவையுங்கோளொடுநீங்குக
இற்றைநாண்முதலாவுண்டாகென்றூர். (சுரு)

அ — வது, ஒற்றுக்கேள்விப்படலம் — முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்—எருசு.

---

## கூ — வது, இலங்கைகாண்படலம்.

ய்தெனக்கொல்லும்விற்கைமானுடர்மகரநீரை
நாய்தினினடைத்துமானத்தானையானுவன்றநும்மூர்
ய்தினரென்றபோதின்வேறினியெண்ணவேண்டும்
சய்திறனுண்டோவென்னச்சேனைகாவாளன்செப்பும். (க)

'ட்டனமாதையென்றபோதினும்வெருவிவேந்தன்
ட்டதென்றிகழ்வர்விண்ணோர்பற்றியும்பகையைத்திர
ட்டலாம்போரிலொன்றொரொட்டினுமுமபியொட்டான்
ட்டியபோதுசெய்வதென்னினிக்கிளத்தல்வேண்டும். (உ)

ண்டுசென்றரிகளோடுமனிசரையமரிற்கொன்று
ண்டுநம்பிருக்கைசேர்துமென்பதுமேற்கொண்டேமேல்
ண்டுவந்நூறுத்தாரென்னும்தலாதுறுதியுண்டோ
வண்டியதெய்தப்பெற்றால்வெற்றியின்விழுமிதுண்டோ. (ரு)

யிரவெள்ளமானவரக்கர்தந்தானையைய
தயினுமூழிநாறுவேண்டுமாற்சிறுமையென்றே
யினஞ்சியங்கண்டதாமெனநடப்பதல்லால்
ருத்தெழுந்தபோதுகுரங்கெதிர்நிற்பதுண்டோ. (சு)

ந்தவர்தானையோடு * மறிந்துமாக்கடலில்வீழ்ந்து
ந்தினரிரிந்துபோகச்சேனையும்யானுஞ்சென்று
வந்தொழில்புரியுமாறுகாணுதிவிடையீகென்றே
ந்திரன்முதுகுகண்டவிராவணற்கேயச்சொன்னுன். (ரு)

திநெறியறிவுசான்றமாலியவானவ்வாய்மை
பாதுநெறிநிலையதாகப்புணர்த்துநல்புலமையென்று

---

* மறிந்து — திரும்பி.

விதிநெறிநிலையதாகவிளம்புகின்றோருமீண்டுச்
சேதுநெறிநிலையினூரேயென்பதுந்தெரியச்சொல்லும். (௬)

பூசற்குமுயன்றுநம்பாற்பொருதிரைப்புணரிவேலைத்
தேசத்துக்கிறைவனானதசரதன்சிறுவன்றன்னை
மாசற்றசோதிவெள்ளத்துச்சியின்வரம்பிற்றோன்றும்
ஈசற்குமீசன்வந்தானென்பதோர்வார்த்தையிட்டார். (௭)

அன்னவற்கிளவறன்னையருமறைபரமென்றோதும்
நன்னிலைநின்றுதீர்ந்துநவையிலாவுயிர்கடோறும்
தொன்னிலைபிரிந்தானென்னப்பலவகைநின்றனாயோன்
இன்னணையெவருங்கேட்கவியம்புவரேதியாதோ. (௮)

அவ்வமர்க்கமைந்தவில்லுங்குலவரையவற்றினான்ற
வெவ்வலிவேறுவாங்கிவிரிஞ்சனேவிதித்துமேனாள்
செவ்வழிநாணுஞ்சேடன்றெறிகணையாகச்சேர்த்திக்
கவ்வயில்காலநேமிக்கணக்கையுங்கடந்ததென்பார். (௯)

வாலிமாமகன்வந்தானைவானவர்க்கிறைவனென்றார்
நீலனையுலகமுண்ணுநெருப்பினுக்கரசனென்றார்
காலனையொக்குந்தூதன்காலுங்கண்ணுதலுமென்றார்
மேலுமொன்றுரைத்தாரன்னான்விரிஞ்சனுமினிமேலென்றார். (௧௦)

அப்பதமவனுக்கீந்தானரக்கர்கோறுப்பதாக
இப்பதியெய்தினானவ்விராமனென்றெவருஞ்சொன்னார்
ஒப்பினூலுரைக்கின்றோரோவுண்மையையுணர்ந்தினோரோ
செப்பியென்குரங்காய்வந்தார்தனித்தனிதேவரென்றார். (௧௧)

ஆயதுதெரிந்தோர்தங்களச்சமோவறிவோயார்க்கும்
சேயவளெளியளென்னுஞ்சிந்தையினிகழுமம்மா
தூயவளமிழ்தினோடுந்தோன்றினாளன்றுந்தோன்றத்
தாயவளுலகுக்கெல்லாமென்பதுஞ்சாற்றுகின்றார். (௧௨)

கானிடைவந்ததேயும்வானவர்கடாவவேயால்
மீனுடையகழிவேலைவிலங்கன்மேலிலங்கைமேவுந்தன்
தானுடைவரத்தையெண்ணித்தனித்தனிதலைவர்தாமே
மானுடவடிவங்கொண்டாரென்பதோர்வார்த்தையிட்டார். (௧௩)

ஆயிர ‡ முற்பாதங்களிங்குளவிருந்தவென்றார்
தாயினுமுயிர்க்குநல்லாளிருந்துழியறியத்தக்கோன்
ஏயினதூதனெற்றப்பற்றுவிட்டிலங்கைத்தெய்வம்
போயினதென்றுஞ்சொன்னார்புகுந்துபோருமென்றார். (௧௪)

* உற்பாதம்-கெடுதிக்குரிய : புதியதோற்றம்.

அம்பினுக்கிலக்கமாவாரரசொடுமரக்கரென்றார்
நம்பரத்தடங்குமென்னாநாவினிற்பொய்யிலாதான்
உம்பர்மந்திரிக்குமேலாமொருமுழமுயர்ந்தஞானத்
தம்பியேசாற்றிப்போனானென்பதுஞ்சமையச்சொன்னான். (கரு)

ஈதெலாமுணர்ந்தேனாயுமென்குலமிறுதியுற்ற
தாதியினிவனாலென்றுமுன்றன்மேலன்பினாலும்
வேதனைநெஞ்சிலெய்தவெம்பியான்விளைவசொன்னேன்
சீதையைவிடுதியாயிற்றீருமித்தீமையென்றான். (கசு)

மற்றெலாநிற்கவந்தமனிதர்வானரங்கள்வாணின்
இற்றைநாளளவுநின்றாரிமையவரென்னுந்தன்மை
சொற்றவாறன்றியேயுந்தோற்றிநீயென்றுஞ்சொன்னாய்
கற்றவாநன்றுபோவென்றினையனகழறலுற்றான். (கஎ)

பேதைமானுடவரோடுகுரங்கலபிறவேயாக
பூதலவரைப்பினாகர்புரத்தினப்புறத்ததாக
காதுவெஞ்செருவேட்டென்னைக்காந்தினர்கலந்தபோது
சீதைதன்றிறத்தின்றாயினமர்த்தொழி * றிறம்புவேனோ. (கஅ)

ஒன்றலபகழியென்கைக்குரியனவுலகமெல்லாம்
வென்றனவொருவன்செய்தவினையினும்வலியவெம்போர்
மூன்றருகென்றதேவர்முதுகுபுக்கமரின்மூன்னம்
சென்றனவின்றுவந்தகுரங்கின்மேற்செல்கலாவோ. (க௯)

சூலமெய்தடக்கையண்ணலானுமோர்குரங்காய்த்தோன்றின்
ஏனுமேலிடைவதல்லாலென்செய்வனென்னைக்கால
வேலையேகடைந்தமேனாளுலகெலாம்வெருவவந்த
ஆலமோவிழுங்கவென்கையயின்முகப்பகழியம்மா. (உ0)

அறிகிலைபோலுமையவமரெனக்கஞ்சிப்போன
வெறிசுடர்நேமியான்வந்தெதிர்ப்பினுமென்கைவாளிப்
பொறிபடச்சுடர்கடையப்போவனபோக்கிலாத
மறிகடல்கடையவந்தமணிகொலாம்பூணமார்பில். (உக)

கொற்றவனிமையோர்கோமான்குரக்கினதுருக்கொண்டானேல்
அற்றைநாளவன்றான்விட்டவயிற்படையறுத்துமாற்ற
இற்றவான்சிறையவாகிவிழுந்துபோயெழுந்துவீங்காப்
பொற்றைமால்வரைகளோவென்புயநெடும்பொருப்புமம்மா. (உஉ)

உள்ளமேதூதுசெல்லவுயிரனாருறையுமூடும்
கள்ளமாமகளிர்சேரநேமிப்புள்கவற்சிங்கக்

* திறம்புவேனோ — தவறுவேனோ.

கொள்ளைபூண்டமரர்வைகுங்குன்றையுங்கோட்டிற்கொண்ட
வெள்ளநீர்வடிந்ததென்னவீங்கிருள்விடிந்ததன்றே. (உ௩)

இன்னதோர்தன்மைத்தாமென்றெட்டியும்பார்ப்பவஞ்சிப்
பொன்மதிற்புறத்துநாளும்போகின்றான்போர்மேற்கொண்டு
மன்னவர்க்கரசன்வந்தான்வலியமாவென்றுதானும்
தொன்னகர்காண்பான்போலக்கதிரவன்றோற்றஞ்செய்தான். (உ௪)

இராமன் சுவேலமலைமீதேறி இலங்கைவளங்காணுதல்.

அருந்ததியனையநங்கையவ்வழியிருந்தாளென்று
பொருந்தியகாதலாண்டப்பொன்னகர்காண்பான்போலப்
பெருந்துணைவீரர்சுற்றத்தம்பியும்பின்புசெல்ல
இருந்தமான்மலையினுச்சியேறினனிராமனிப்பால். (உ௫)

செருமலிவீரரெல்லாஞ்சேர்ந்தனர்மருங்குசெல்ல
இருதிறல்வேந்தர்தாங்குமிணைநெடுங்கமலக்கையான்
பொருவலிவயவெஞ்சியம்யாளையும்புலியுஞ்சுற்ற
அருவரையிவர்வதாங்கோரரியரசனையதொத்தான். (உ௬)

கதமிகுந்திரைத்துப்பொங்குங்கனைகடலுலகமெல்லாம்
புதைவுசெய்யிருளிற்பொங்குமாநகர்க்கோபுரமும்பொற்பும்
சிதைவுசெய்குறியைக்காட்டிவடதிசைச்சிகரக்குன்றின்
உதையமதொழியத்தோன்றுமொருகருஞாயிறொத்தான். (உ௭)

துமிலத்திண்செருவின்வாளிப்பெருமழைசொரியத்தோன்றும்
விமலத்திண்சிலையனண்டோர்வெற்பினைமேயவீரன்
அமலத்திண்கரமுங்காலும்வதனமுங்கண்ணுமான
கமலத்தின்காடுபூத்தகானமாமேகமொத்தான். (உ௮)

மற்குவடனையதிண்டோண்மானவன்மானமில்லாக்
கற்குவடடுக்கிவாரிக்கடலினைக்கடந்தகாட்சி
நற்குவடனையவீரரீட்டத்தினடுவணின்றான்
பொற்குவடிடையேதோன்றுமரகதக்குன்றம்போன்றான். (உ௯)

அணைநெடுங்கடலிற்றோன்றவாற்றியச்சிறந்தையன்
பிணைநெடுங்கண்ணியென்றன்றுயிர்துறந்திடலின்னை
துணைபிரிந்தயருமன்றிற்சேவலிற்றளர்கின்றான்
இணைநெடுங்கமலக்கண்ணனிலங்கையையெய்தக்கண்டான். (௩௰)

நந்திருநகரேயாதிவேறனாநகர்கட்கெல்லாம்
வந்தபேருவமைகூறிவழுத்துவானமைந்தகாலை
இந்திரனிருக்கையென்பாரிலங்கையையெதிர்க்கக்காட்டா
அந்தரமுணர்ந்தமேற்றாருங்கவிப்புலவரம்மா. (௩௧)

பழுதறவிளங்குஞ்செம்பொற்றலத்திடைப்பரிதிநாண
முழுதெரிமணியிற்செய்துமுடிந்தனமுனைவராலும்
எழுதருவகையவாயவியையவனவியையச்செய்த
தொழிறெரிகிலவாற்றங்கட்சுடர்மணிக்கற்றைசுற்றி. (௩௨)

விரிகின்றகதிரவாகிமிளிர்கின்றமணிகள்வீசச்
சொரிகின்றசுடரின்சும்மைவிசும்புறத்தொடருந்தோற்றம்
அரியென்றவெற்றியாற்றன்மாருதியமைத்ததீயால்
எரிகின்றதாமேகாணிக்கொடிநகரிருந்ததின்னும். (௩௩)

மாசடைபரந்தமானமரகதத்தலத்துவைத்த
காசடைசமைந்தமாடங்கதிர்த்தழைக்கற்றைசுற்ற
ஆசடைகுன்றவெள்ளியகன்மலையன்னமாகப்
பாசடைப்பொய்கைபூத்தபங்கயநிகர்ப்பபாராய். (௩௪)

தீச்சிகைசிவணுஞ்சோதிச்செம்மணிச்செய்ததூணில்
தூச்சுடர்மாடமீண்டித்துறுதலாற்கருமைதோன்றா
நீச்செலுமேகமெல்லாம்விரிசுடரிலங்கைவேறு
காய்ச்சியவிரும்புமானச்சேர்ந்தவையொளிர்வகாணாய். (௩௫)

விற்படிதிரடோள்வீரநோக்குதிவெங்கண்யானை
அற்படிநிறத்தவேனுமாடகத்தலத்தையார்க்கக்
கற்படிவயிரத்திண்கானகங்களிற்கல்லிக்கையால்
பொற்படியென்னவீசிப்பொன்மலையென்னப்போவ. (௩௬)

பூசல்விற்குமரநோக்காய்புகரறவிளங்கும்பொற்பின்
காசுடைக்கவரிக்கற்றைக்கால்களாற்கதுவுகின்ற
வீசுபொற்கொடிகளெல்லாம்விசும்பினின்விரிந்தமேக
மாசறத்துடைத்தவ்வானம்விளங்குவபோலுமாதோ. (௩௭)

நூல்படத்தொடர்ந்தபைம்பொற்சித்திரநுனித்தபத்திக்
கோல்படுமனைகளாயகுலமணியெவையுங்கூட்டிச்
சால்படுத்தரக்கன்மாடத்தனிமணிநடுவட்சார்த்தி
மால்கடற்கிறைவன்பூண்டமாலைபோன்றுளதிம்மூதூர். (௩௮)

நன்னெறியறிஞநோக்காய்நளிர்நெடுந்தெருவினைப்பண்
பன்மணிமாடப்பத்திநிழல்படப்படர்வபண்பால்
தன்னிறந்தெரிகிலாதவொருநிறஞ்சார்கிலாத
இன்னதோர்குலத்தவென்றுபுலப்படாபுரவியெல்லாம். (௩௯)

வீரநீபாராய்மெல்லென்பளிங்கினால்விளங்குகின்ற
மாரனுமருளச்செய்தமாளிகைமற்றோர்சோதி

சேர்தலுந்தெரிவவன்றேற்றேர்கிலாத்தெரிந்தகாட்சி
நீரிஞலியன்றவென்னநிழலெழுகின்றநீர்மை. (௪௦)

கோணிறக்குனிவிற்செங்கைக்குமரனேகொழுவெண்டிங்கட்
காணிறக்கதிர்வெண்டிங்கடெற்றியவாயகாட்சி
வாணிறத்தரளப்பந்தர்மரகதநடுவெண்வைத்த
பாணிறப்பரவைவைகும்பரமனைநிகர்ப்பபாராய். (௪௧)

கோளவாவரியேறன்னகுருசிலேகொள்ளநோக்காய்
நாளவாமின்றேய்மாடத்தும்பரோரரகர்பாவை
காளவாவுறையின்வாங்குங்கண்ணடிவிசும்பிற்கவ்வி
வாளராவிழுங்கிக்காலுமதியினைநிகர்ப்பபாராய். (௪௨)

கொற்றவான்சிலைக்கைவீரகொடியுடைமாடக்குன்றை
உற்றவான்கழுத்தவானவொட்டகம்வைத்தநம்பல்
* செற்றியமணிகளின்றசுடர்களோடு † சேக்காரத்தின்
கற்றையந்தளிர்களென்னக்கவ்வியதிகிர்பாராய். (௪௩)

வாகைவெஞ்சிலைக்கைவீரமலர்க்குழல்வழிக்குமாலைத்
தோகையரிட்டதூமத்தகிற்புகைமுழுதுஞ்சுற்ற
வேகவெங்களிற்றின்வன்றேன்மெய்புறப்போர்த்ததையல்
பாகனிற்பொலிந்துதோன்றும்பவளமாளிகையைப்பாராய். (௪௪)

காவலன்பயந்தவீரக்கார்முகக்கலைதேர்கொற்ற
தேவர்தந்தச்சனீலக்காசினுற்றிருந்தச்செய்த
ஈவதுதெரியாவுள்ளத்திராக்கதர்ட்டிவைத்த
‡ பாவபண்டாரமன்னசெய்குன்றம்பலவும்பாராய். (௪௫)

பிணைமதத்தனையநோக்கம்பாய்படப்பிடியுண்டன்பிற்
துணைவனைப்பிரிந்துபோந்துமருங்கெனத்துவளுமுள்ளம்
பணமயிர்ப்பெய்துமல்குற்பாவையர் ¶ பருவநோக்கும்
கணமயிற்குழுவினம்மைக்காண்கின்றார்தம்மைக்காணாய். (௪௬)

§ நாழ்மலர்த்தெரியல்வீரசம்படைகாணவானத்
தியாழ்மொழித்தெரிவைமாருமைந்தருமேறுகின்றார்
வாழ்விளிச்சமைந்தவென்றேறியன்றவுமாதகரையெல்லாம்
பாழ்படுத்திரியல்போவாரொக்கின்றபரிசுபாராய். (௪௭)

* செற்றிய — நெருங்கிய.
† சேதாரத்தின் என்றும் பாடம்.
‡ பாவபண்டாரம் — பாவத்துக்கிருப்பிடம்.
¶ பருவம் — மழைக்காலம்.
§ நாழ் — நாள்.

இராவணன் கோபுரத்தின்மீதேறி வானரசேனைகளைக் காண்டல்.

இன்னவாறிலங்கை தன்னையிளையவற்கிராமன்காட்டிச்
சொன்னவாசொல்லாவண்ணமதிசயந்தோன்றுங்காலை
அன்னமாநகரின்வேந்தனரிக்குலப்பெருமைகாண்பான்
சென்னிவான்றடவுஞ்செம்பொற்கோபுரத்தும்பர்சேர்ந்தான். (சஅ)

கூ-வது, இலங்கைகாண்படலம் - முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-அOச.

---

## கO-வது, இராவணன்றூனைகாண்படலம்.

கவடுகப்பொருதகாய்களிறன்னான்
* அவடுயக்கின்மலரம்புறவெம்பும்
சுவடுடைப்பொருவிறூள்கொடநேகம்
குவடுடைத்தனியொர்குன்றெனநின்றான். (க)

பொலிந்ததாமினிதுபோரெனவோடும்
மலிந்தநங்கையெழிலால்வலிநாளும்
மெலிந்ததோள்கள்வடமேருவின்மேலும்
வலிந்துசெல்லமிசைசெல்லுமனத்தான். (உ)

செம்பொன்மௌலிசிகரங்கடயங்க
அம்பொன்மேருவரைகோபுரமாக
† வெம்புகாலினைவிழுங்கிடமேனூள்
உம்பர்மீதுமிமிர்வாசுகியொத்தான். (௩)

தொக்கபூதமவையைந்தொடுநூன்னிட்
டொக்கநின்றதிசையொன்பதொடொன்றும்
பக்கமுந்நிழல்பரப்பிவியப்பால்
மிக்கநின்றகுடைமீதுவிளங்க. (௪)

கைத்தருங்கவரிவீசியகாலால்
நெய்த்திருண்டுயருநீள்வரைமீதில்
தத்திவீழருவியின்றிரள்சால
உத்தரீகநெடுமார்பினுலாவ. (௫)

* அவடுயக்கு-அச்சீதையின் மோகத்தாலுண்டான மயக்கம்.
† வெம்புகாலினை-சீற்றங்கொண்ட வாயுதேவனை.

வானகத்தினிலுருப்பசிவாசத்
தேனகத்தருதிலோத்தமைசெவ்வாய்
* ஏனகைக்குலவரம்பையர்யாரும்
சானகிக்கழகுதந்தயல்சார. (சு)

வீழியின்கனியிதழ்ப்பணைமென்றோள்
ஆழிவந்தவரமங்கையரைஞ்ஞூற்
றேழிரண்டினினிரண்டுபயின்றோர்
சூழிரண்டுபுடையும்முறைசுற்ற. (எ)

முழைபடிந்தபிறைமுள்ளெயிறுள்ளார்
இழைபடிந்தவிளவெண்ணிலவீனக்
குழைபடிந்ததொருகுன்றின்முழங்கா
மழைபடிந்தனையதொங்கல்வயங்க. (அ)

ஓதுநூல்கள்வழியின்செவியுள்ளும்
சீதைசீதையெனுமாருயிர்தேய
நாதவீணையிசைசாரதர்பாட
வேதகீதவமிழ்தள்ளிவிழுங்க. (கூ)

வெங்கரத்தரயில்வாளினர்வில்லோர்
சங்கரற்கும்வலிசாய்விலவற்றோர்
அங்கரக்கர்சதகோடியடைத்தோர்
பொங்கரத்தவிழியோர்புடைசூழ. (க0)

கல்விலங்கையுலகங்கவர்கிற்போர்
நல்விலங்கைமுதலோர்கவையில்லோர்
சொல்விலங்கர்சதகோடிதொடர்ந்தோர்
வில்விலங்குபடையோர்புடைவிம்ம. (கக)

பாரியங்குநர்விசும்புபரந்தோர்
வாரியங்குமழையின்குரன்மாறும்
பேரியங்கண்முருடாகுளிபெய்க்கும்
ஆரியங்கடலினின்றதுமைப்ப. (கஉ)

நஞ்சுமஞ்சுவிழிநாகியர்மானை
வஞ்சியஞ்சவிடைமங்கையர்வானத்
தஞ்சொலிஞ்சொலினரம்பையரோடும்
† பஞ்சமஞ்சிவணுமின்னிசைபாட. (கங)

* ஏனகை-எல்நகை. எல்-பொருந்தின, நகை-தந்தங்களையுடைய.
† பஞ்சமஞ்சிவணும்-தமிழிராகமான பஞ்சமத்தினையொத்த.

நஞ்சுகக்கியெரிகண்ணினர்நாமக்
கஞ்சுகத்தர்கதைபற்றியகையர்
மஞ்சுகக்குமுறுசொல்லினர்வல்வாய்ச்
சிஞ்சுகத்தின்விசையோர்திசைசெல்ல. (கச)

கூயுரைப்பகுலமால்வரையேனும்
சாயுரைப்பரியவாயதடந்தோள்
வாயுரைத்தகலவைக்களிவாசம்
வேயுரைப்பதெனவந்துவிளம்ப. (கரு)

வேத்திரத்தரெரிவீசிவிழிக்கும்
நேத்திரத்தரிறைநின்றுழிநில்லாக்
காத்திரத்தர்மனைகாவல்விரும்பும்
சூத்திரத்தர்பதினுயிரர்சுற்ற. (கசு)

தோரணத்தின்மணிவாயின்மிசைச்சூல்
நீரணைத்தமுகிலாமெனநின்றூன்
ஆரணத்தையரியைம்மறைநேடும்
காரணத்தைநிமிர்கண்கொடுகண்டான். (கஎ)

மடித்தவாயினன்வயங்கெரிவந்து
பொடித்திழிந்தவிழியன்னதுபோழ்தின்
இடித்தவன்றிசையெரிந்தனநெஞ்சம்
துடித்தகண்ணினேடிடத்திரடோள்கள். (கஅ)

* ஆகராகவனையவ்வழிகண்டான்
மாக † ராகநிறைவாளொளியோனை
‡ ஏகராசியினினெய்தவெதிர்க்கும்
வேகராகுவெனவெம்பிவெகுண்டான். (கசு)

இராவணனிராமனை யுணர்ந்தே னேனையோரையுரையெனல்.

ஏனையோனிவனிராமனெனத்தன்
மேனியேயுரைசெய்கின்றதுவென்றிச்
சேனைவீரர்படையைத்தெரியென்று
தான்வினவவெதிர்சாரன்விளம்பும். (உ0)

இங்கிவன்படையிலங்கையர்மன்னன்
தங்கையென்னவுமுதிர்ந்தசலத்தால்
அங்கைவாள்கொடவளாகம்விளங்கும்
கொங்கைநாசிசெவிகொய்துகுறைத்தான். (உக)

---

* ஆக - அவ்வாறாக.
† ராகநிறை - செந்நிறநிறைந்த.
‡ ஏகராசியினில் - அமாவாசையன்று.

அறக்கணென்பதொருகண்ணிலனேகி
நிறக்கருங்கடலுணேமியினின்று
துறக்கமெய்தியவருந்துறவாத
உறக்கமென்பதனையோடமுனிந்தான். (உ௨)

* கய்யவன்றொடவமைந்தகரத்தான்
நய்யவாலியொடிவண்டநடுங்கச்
செய்தவன்செருவினிற்றிகழ்கின்றான்
வெய்யவன்புதல்வன்யாரினும்வெய்யான். (உ௩)

தந்தைமற்றவனசார்வில்வலத்தோர்
அந்தரத்தரமுதார்கலிகாண
மந்தரத்தினொடும்வாசுகியோடும்
சுந்தரப்பெரியதோள்கடிரித்தான். (உ௪)

நடந்துநின்றவனருங்கதிர்முன்பு
தொடர்ந்தவன் † னுலகு ‡ சுற்று § மெயிற்றின்
இடந்தெழுந்தவனையொத்தவன்வேலை
கடந்தவன்சரிதைகண்டனையன்றே. (உ௫)

நீலனின்றவனெருப்பின்மகன்றன்
சூலமுங்கயிறுமின்மைதொடர்ந்தோன்
ஆலமொன்றுநிறமென்றயலோனைக்
காலனென்பரிவனைக்கருதாதார். (உ௬)

வேறு.

வேறாகநின்றானவனென்றுமிலங்கலன்றான்
ஏறாவருணன்வழிதந்திலனென்றிராமன்
சீறாதவுள்ளத்தெழுசீற்றமுகுத்தசெந்தீ
ஆறாதமுன்னம்மகன்வேலையை ○ யாறுசெய்தான். (உ௭)

முக்காலமுமொய்ம்மதியான்முறைநல்லுணர்வான்
புக்காலமெழுப்புணரிப்புலவோர்களுக்கும்
அக்காலமுள்ளான்கரடிக்கரசாகினின்றான்
இக்காலனின்றுமுலகேழுமெடுக்கவல்லான். (உ௮)

சேனைபதிதன்னையலையிருள்செய்தநின்றின்
ஆனைமருங்கேயிரண்டாடகக்குன்றினின்றார்

* கய்யவன்றொட - கரத்தினை அவ்விலக்குமவன்றொட.
† உலகு - உலகினை. ‡ சுற்றும் - சுற்றியெயிற்று.
§ எயிற்றின்-வக்கிரதந்தமுடைய பூவராகப்பெருமான்.
○ ஆறுசெய்தான் - சேதுவால் வழியாக்கினான்.

ஏனோரிலிராமனிலக்குவனென்னுமிட்டார்
வானோர்தமருத்துவன்மைந்தர்வலிக்கண்மிக்கார். (உ௯)

உவன்காண்குமுதன்குமுதாக்கனுமுங்கவன்காண்
இவன்காண்கவையன்கவையாக்கனுமீங்கிவன்காண்
சிவன்காணயன்காணெனுந்தூதனைப்பெற்றசெல்வன்
அவன்காணெடுங்கேசரியென்பவனுற்றன்மிக்கான். (௩O)

* மூரபன்னகுதோளவன்மூரிமடங்கலென்னக்
கரபன்னகமன்னவைமின்னுகக்காந்துகின்றான்
வரபன்னகந்தன்னையும்வேரொடுவேண்டின்வாங்கும்
சரபன்னவனிவன்சதவலியாயதக்கோன். (௩௧)

வேறு.

மூன்றுகண்ணிலனாயினுமூன்றெயிலெரித்தோன்
போன்றுநின்றவன்பனசனிப்போர்க்கெலாந்தானே
என்றுநின்றவனிடபன்மற்றிவன்றனக்கெதிரே
தோன்றுகின்றவன்சுசேடணனறிவொடுதொடர்ந்தோன். (௩உ)

வெதிர்கொள்குன்றெலாம்வேரொடும்வாங்கிமேதினியை
முதுகுநொய்தெனச்செய்தவன்கனலையுமுனிவோன்
கதிரவன்மகற்கிடமருங்கேநின்றகாளை
ததிமுகன்னவன்சங்கனென்றுரைக்கின்றசிங்கம். (௩௩)

அண்ணல்கேளிதற்கவதியுமளவுமொன்றுளதோ
விண்ணின்மீனினைக்குணிப்பினும்வேலையின்மீனை
எண்ணிநோக்கினுமக்கடன்மணலினையெல்லாம்
கண்ணிநோக்கினுங்கணக்கிலதென்றனன்காட்டி. (௩௪)

சினங்கொடிண்டிறலரக்கனுஞ்சிறுநகைசெய்தான்
புனங்கொள்புன்றலைக்குரங்கினைப்புகழுதிபோலாம்
வனங்களும்படர்வரைதொறுந்திரிதருமானின்
இனங்களும்பலவென்செயுமரியினையென்றான். (௩௫)

என்னும்வேலையினிராவணற்கிளவலையிராமன்
கன்னிமாமதிணகர்நின்றுநம்வலிகாண்பான்
முன்னிவானினுமூடிநின்றார்களைமுறையால்
இன்னநாமத்தரினையரென்றியம்புதியென்றான். (௩௬)

நாறுதன்குலக்கிளையெலாநரகத்துநடுவான்
சேறுசெய்துவைத்தானும்பர்திலோத்தமைமுதலாக்

* மூரபன்-வன்மையுடையவனும்

கூறுமங்கையர்குழாத்திடைக்கோபுரக்குன்றத்
தேறிநின்றவன்புன்றொழிலிராவணனென்றான். (௩௭)

சுக்கிரீவன் இராவணன்மீது பாய்தல்.

கருதிமற்றொன்றுகழறுதன்முனம்விழிக்கனல்கள்
பொருதுபுக்கனன்முந்துறச்சூரியன்புதல்வன்
சுருதியன்னமுன்சிவந்தநற்கனியென்றுசொல்லப்
பருதிமேற்பண்டுபோய்ந்தவனுமெனப்பாய்ந்தான். (௩௮)

சுதையத்தோங்கியசுவேலத்தினுச்சியைத்துறந்து
சிதையத்திண்டிறலிராவணக்குன்றிடைச்சென்றான்
ததையச்செங்கரம்பரப்பியதன்பெருந்தாதை
உதையக்குன்றினின்றுகுன்றிற்பாய்ந்தவனொத்தான். (௩௯)

பள்ளம்போய்ப்புகும்புனலெனப்படியிடைப்படிந்து
தள்ளும்பொற்கிரிசலிப்புறக்கோபுரத்தைச்சார்ந்தான்
வெள்ளம்போற்கண்ணியமூதலுமிராவணன்மேற்றன்
உள்ளம்போற்செலுங்கழுகிலுக்கரசனுமொத்தான். (௪௰)

கரியகொண்டலைக்கருணையங்கடலினைக்காணப்
பெரியகண்கள்பெற்றவக்கின்றவரம்பையர்பிறரும்
உரியகுன்றிடையுருவிடைவீழ்ந்தவருமுலைபுற்
றிரியல்போயினமயிற்பெருங்குலமெனவிரிந்தார். (௪௧)

௪௰ - வது, இராவணன்றனைக்காண்படலம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - [illegible]

---

## ௧௧ - வது, மகுடபங்கப்படலம்.

---

காலவிருள்சிந்தநகிடுகோள்மழுவெனன்றறைந்
தேலவெதிர்சென்றரடவிராவணனையெய்தி
நிலமலைமுன்கயிலைநின்றவிதனாலைன்றனன்
ஆலவிடமன்றவரனின்றசினனான்றனன். (௧)

* இத்திசையின்வந்துபொருதேவனினையாவியம்பத்
தத்தியெதிர்சென்றுதிசையென்றுயர்தடந்தோள்

* இத்திசையில் - இவ்விடத்தில்.

பத்திறேடுபெத்துடையவன் ஹுடல்பதைப்பக்
குத்தினனுரத்தினிமிர்கைத்துணைகுளிப்ப. (உ)

திருகியசினத்தொடுசெறுத்தெதிர்விழித்தான்
ஒருபதுதிசைக்கணுமொலித்தவொலியொப்பத்
தருவனமெனப்புடைதழைத்துயர்தடக்கை
இருபதுமெடுத்துருமிடித்தெனவடித்தான். (ங)

அடித்தவிரல்பட்டவுடலத்துழியிரத்தம்
பொடித்தெழவுறுக்கியெதிர்புக்குடல்பொருத்திக்
கடுத்தவிசையிற்கடிதெழுந்துகதிர்வேலான்
முடித்தலைகள்பத்தினுமுகத்தினுமுதைத்தான். (ச)

உதைத்தவனடித்துணைபிடித்தொருகணத்தில்
பதைத்துலைவுறப்பலதிறத்திகல்பரப்பி
மதக்கரியையுற்றரிநெரித்தெனமயக்கிச்
சுதைத்தலனிடைக்கடிதடக்கொடுதுகைத்தான். (ரு)

துகைத்தவனுடற்பொறைசுறுக்கொளவிறுக்கித்
தகைப்பெருவலத்தொடுதலத்திடையமுக்கி
வகைப்பிறைறிறத்தெயிறுடைப்பொறிவழக்கிக்
குகைப்பொழிபுதுக்குருதிகைக்கொடுகுடித்தான். (சு)

கைக்கொடுகுடித்தவனுடற்கனகவெற்பைப்
பைக்கொடுமிடற்றரவெனப்பலகைபற்றி
மைக்கொடுநிறத்தவன்மறத்தொடுபுறத்தில்
திக்கொடுபொருப்புறநெருப்பொடுதிரித்தான். (எ)

திரித்தவனுரத்தினுகிர்செற்றும்வகைகுத்திப்
பெருத்துயர்தடக்கையொடடித்திடைபிடித்துக்
கருத்தழிவுறத்திரிதிறத்தெயில்கணத்தன்
றெறித்தவனையொத்தவனெடுத்தகழியிட்டான். (அ)

* இட்டவனையிட்டவழிறுற்கடிதினிட்டான்
தட்டவுயரத்தினிமிருந்தசமுகத்தான்
ஒட்டவுடனேயவனும்வந்தவனையுற்றான்
விட்டிலர்புரண்டிருவரோரகழின்வீழ்ந்தார். (கூ)

விழுந்தனர்சுழன்றனர்வெகுண்டனர்திரிந்தார்
அழுந்தினரழுந்திலரகன்றிலரகன்றார்
எழுந்தனரெழுந்திலரெதிர்ந்தனர்முதிர்ந்தார்
ஒழிந்தனரொழிந்திலருணர்ந்திலர்களொன்றும். (க0)

---

* இட்டவனை - தனைத்தூக்கியிட்டவனை.

அந்தரவருக்கன்மகனுழியகனாகச்
சுந்தரமுடைக்கரம்வலிப்பதொர்சுழிப்பட்
டெந்திரமெனத்திரியிரக்கமிலரக்கன்
மந்தரமெனக்கடையும்வாலியையுமொத்தான். (௧௧)

ஊறுபடுசெம்புனலுடைந்தகழையுற்ற
ஆறுபடர்கின்றனவெனப்படரவன்றோர்
பாறுபொருகின்றனபருந்திவையெனப்போய்
எறினர்விசும்பிடையிரிந்தவுலகெல்லாம். (௧௨)

தூரநெடுவானின்மலையுஞ்சுடரவன்சேய்
காரினெடுமேருநிகர்காய்சினவரக்கன்
தாருடையதோள்கள்பலவுந்தழுவநின்றான்
ஊழிநெடுகோள்களவுதாரகையுமொத்தான். (௧௩)

பொங்கமர்விசும்பிடையுடன்றுபொருபோழ்தில்
செங்கதிரவன்சிறுவனைத்திரள்புயத்தால்
மங்கலவயங்கொளிமறைத்தவரக்கன்
வெங்கதிர்கரந்ததொருமேகமெனலானான். (௧௪)

நூபுரமடந்தையர்கிடந்தலற *நோனார்
மாபுரமடங்கலுமிரிந்தயரவன்றோர்
மீபுரமடங்கலெனவொன்றிரதமிற்செய்
கோபுரமடங்கவிடியத்தனிகுதித்தான். (௧௫)

ஒன்றுறவிழுந்தவுருவாமதொடமேவாடா
மின்றெறியெயிற்றினொருமேகம்வீழுமென்னத்
தின்றிடுவெனப்பொழுதினிற்றிறலரக்கன்
பின்றொடரவந்திருகரந்துணைபிடித்தான். (௧௬)

வந்தவனைநின்றவன்வலித்திறலெடுத்தான்
அந்தகனுமஞ்சிடநிலத்திடையறைந்தான்
எந்திரமெனக்கடிதெழுந்துமெதிர்ந்தான்
கந்துகமெனக்கடிதெழுந்தெதிர்கலந்தான். (௧௭)

படிந்தனமரந்தரைபகிர்ந்தனபடப்பும்
கொடுஞ்சினமுதிர்ந்தனபுரத்தினிலைகுத்த
நெடுஞ்சுவர்பிளந்தனபிளிர்ந்தனகுன்றம்
இடிந்தனதகர்ந்தனவிலங்கைமதிலெங்கும். (௧௮)

---

* நோனார் - பகைவரானவசுரர்.

செறிந்துயர்கறங்கனையமேனிநிலைதேரார்
பிரிந்தனர்பொருந்தினரெனத்தெரிதல்பேணார்
எறிந்திலர்களெய்திலர்களின்னரெனமுன்னின்
றறிந்திலரரக்கருமமர்த்தொழிலயர்ந்தார். (க௯)

வேறு.

இராமன் சுக்கிரீவனைக் காணாது கவற்சியெய்துதல்.

இன்னதோர்தன்மையெய்துமளவையினெழிலிவண்ணன்
மன்னுயிரனையகாதற்றுணைவனைவரவுகாணான்
உன்னியகருமமெல்லாமுன்னொடுமுடிந்தவென்னாத்
தன்னுணர்வழிந்துசிந்தையலம்வந்துதளர்ந்துசாய்ந்தான். (உ0)

ஒன்றியவுணர்வேயாயவோருயிர்த்துணைவுன்னை
இன்றியானுளனாய்நின்றேனென்றியற்றுவதியைவதன்றால்
அன்றியுந்துயரத்திட்டாயமரரையரக்கர்க்கெல்லாம்
வென்றியுங்கொடுத்தாயென்னைக்கெடுத்ததுன்வெகுளியென்றான். (உக)

தெய்வவெம்படையுந்தீராமாயையும்வல்லதீயோன்
கையிடைப்புக்காய்நீயேவெறவ்வண்ணங்கடத்திகாவல்
ஐயமோரேழும்பெற்றால்வாழ்வெனோவாராயாகின்
உய்வனோதமியனேனுக்குயிர்தந்தவுதவியோனே. (உஉ)

ஒன்றாகநினையவொன்றாய்விளைந்ததென்கருமந்தோ
ஏன்றாலும்யானேவாழேனீயிலையெனவுங்கேளேன்
இன்றாயபழியுநிற்கநெடுஞ்செருக்களத்தினென்னைக்
கொன்றாய்நீயன்றோநின்னைக்கொல்லுமேற்குணங்கடையோன். (உ௩)

இறந்தனையென்றபோதுமிருந்தியானரக்கரென்பார்
சிறந்தனையுலகினீக்கிப்பின்னுயிர்தீர்வெனேனும்
புறந்தருபண்பினுயவுயிரொடும்பொருந்தினானை
மறந்தனன்வலியனென்பாராதலாலதுவுமாட்டேன். (உ௪)

அழிவனசெய்தாயையவன்பினாலளியற்றேனுக்
கொழிவருமுதவிசெய்தவுன்னையானொழியவாழ்தல்
தழுவதுவெள்ளந்தன்னினீண்டோர்பேரெஞ்சாதேகிச்
செழுநகரடையினன்றேவித்துயர்தீர்வதென்றான். (உ௫)

இராவணன் மகுடங்களை சுக்கிரீவன் கிரகித் திராமனையடைதல்.

என்றவனிரங்குங்காலத்திருவருமொருவர்தம்மில்
வென்றிலர்தோற்றிலாராய்வெஞ்சமம்விளைக்கும்வேலை
வன்றிறலரக்கன்மௌலித்தனிமணி † வலியால்வாங்கிப்
பொன்றினனென்றவன்வெட்கவிவனும்போந்தான். (உ௬)

† வாயில்வாங்கி என்றும் பாடம்.

